# ஊச்சா பையன்



விளாடிமிர் ராடூன்ச்க்கி

தமிழில் கிருஷ்ணன்

# ஊச்சா பையன்



பசங்களா ! உங்களுக்கு தெரியுமா ஒரு
குட்டி பயன் மூத்திரம் அடிச்சு ஒரு
பெரிய போரை நிறுத்தினானாம் !

அது எப்படினு கேக்குறீங்களா ?

இந்த சுவாரசியமான கதையை படிச்சா
நீங்களே தெரிஞ்சுக்குவீங்க !



ரொம்ப ...ரொம்ப... ரொம்ப  நாளைக்கு முன்ன ஒரு குட்டி  அழகான ஊரு இருந்ததாம். அது ஒரு உயரமான சுவறால் சூழப்பட்டிருந்ததாம். அது இப்படி தான் இருந்ததாம்.



அந்த ஊருல ஒரு குட்டி- சுட்டி  பையன்
அவனுடைய பெற்றோர்களுடன்
இருந்தானாம். அவன் மீது
பெற்றோர்கள் அளவிலா அன்பு
கொண்டிருந்தார்களாம்.



அவனுடைய அம்மாவோ
எப்போது பார்த்தாலும்
அவனுக்கு
முத்தம்  கொடுத்து
கொண்டே இருந்தாளாம்.
அவனுடைய
அப்பாவோ  நாள்
முழுவதும் அவனோடு
விளையாண்டு கொண்டே
இருந்தாராம்.



ஒவ்வொரு நாள் காலையிலும்  அச்சிறுவன் அவனுடைய  பெற்றோர்களோடு அவ்வூரிலுள்ள பூ  சந்தைக்கு  சென்று வந்தான். ஆஹா! எத்தனை அழகான பூக்கள் அங்கிருந்தன !

ஆஹா!  என்ன ஒரு ஜாலியான வாழ்க்கை !
அவர்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்நதார்கள்.




பிறகு ஒரு நாள் தொடங்கியது
போர் !
அந்த அழகான ஊரை அழிக்க
வந்தனர் எதிரிகள்.
எதிரிகள்
பொறாமை
கொண்டனர்
போலும்
அந்த அழகான
ஊரை நாசமாக்க
வந்தனர்
என்ன
கொடுமை.
எவ்வளவு
கொடுமையான
போர் !



கொடூரமான
சண்டை தொடங்கியது
சண்டைனா சண்டை...
அப்படிப்பட்ட சண்டை
இராத்திரியும் பகலுமா !

இராத்திரியும் பகலுமா !

அந்த அழகான ஊரு
இப்போ சோகமான ஊராகி போனது





தெருக்களில் குழந்தைகளின்
விளையாட்டும் கிடையாது.
சந்தைகளில் பூக்களும் கிடையாது.
ஒரு சிரிப்பு சத்தமும் கிடையாது.


அந்த இளஞ்சிறுவன் மிகவும் சோர்ந்து போனான்.
விளையாடுவதற்கு அப்பாவும் இல்லை.
முத்தம் கொடுப்பதற்கு அம்மாவும் இல்லை.
எங்கு தான் போனார்கள் அப்பாவும் அம்மாவும் ?
உரக்க உரக்க கூப்பிட்டும் யாரும் வரவில்லை.

அச்சிறுவன் எல்லா இடத்திலும்
தேடினான். எல்லோரும்
எங்குபார்த்தாலும் சண்டையிடு
வதேயே பார்த்தான்,
ஊரு முழுக்க சண்டையே
நிறைந்திருந்தது.

டம் - டமால்...

டும் - டுமீல்...



க்ளாங் - க்ளாங்...

பாவம் அச்சிறுவன் பயந்து உறைந்து இருந்தான்
இத்தருணத்தில் அப்பாவும் அம்மாவும் அவசியம்
தேவைப்பட்டார்கள்
ஒரு இயற்கையின் உபாதையும் அவனை
தொந்தரவு கொடுத்து கொண்டிருந்தது.

அது.. அது.. அவனுக்கு ஊச்சா முட்டி கொண்டு வந்தது. சுரென்று அங்கிருந்து ஊச்சா அடித்தான்.



அது கீழே நடக்கும் டம் - டமால் டும் - டுமீல் சண்டை செய்பவர்கள் மீது போய் விழுந்தது. இடது பக்கம் வலது பக்கம் என அவன் அடித்து விட்டான். அவனை மன்னித்து விடுங்கள். அவன் சிறுவன் தானே என்று ஒரு குரல் கேட்டது.





அந்த கணமே அங்கு அமைதி நிலவியது !

ஹ ஹா ... ஹ
ஹா... ஹ ஹா



ஹி ஹீ... ஹி
ஹீ...ஹி ஹீ...



சிறுது நேரத்தில் ஊரின்
நான்கு பக்கமும் சிரிப்பொலி கேட்டது.
சண்டைபோட்டு கொண்டிருந்த அத்தனை
பேரும் கொல்லென்று சிறித்து
கொண்டிருந்தனர்.





சிரிப்பு சத்தம் அடங்கவே இல்லை. சூரியன் மறைந்தும் விட்டது
முதல் நட்சத்திரமும் வரத் தொடங்கியது.
சிரித்து சிரித்து மக்கள் ஓய்ந்தே போகிவிட்டார்கள்.
அப்படியே ஆயுதங்களை போட்டு விட்டு உறங்கி விட்டனர்.
அடுத்த நாள் காலை எழுந்த போது யாரும் போரிடவில்லை ஏன்?
அந்த செல்லக்குட்டி சிறுவனால்.

ஹுரா... !!!

## இறுதியுரை

ஒருவழியாக சிறுவன் அப்பாவோடும் அம்மாவோடும் இணைந்தான்.
திரும்பவும் அந்த ஊர் சொர்க்கமானது.
எல்லோரும் மகிழ்ச்சி அடைந்தனர் .
அந்த ஊரில் உள்ள அனைவரும் அந்த குட்டி சிறுவனின் மீது அன்பு செலுத்தினர்.
அவன் செயலின் நினைவாக ஒரு வெண்கல சிலை ஒன்றை செய்தனர். வருங்கால சந்ததியினருக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும் என்பதற்கே அதை செய்தனர். ஊச்சா பையன் ! என்று எல்லோராலும் அறியப்பட்டான்.





அந்த ஊரின் பெயர் ப்ரசல்ஸ் .

அந்த நாட்டின் பெயர் பெல்ஜியம்





ஒரு நாள் நீங்களும்  அந்த
ஊரிற்கு சென்று அந்த
சிலையை காண வேண்டும்
அங்குள்ள கதையை தெரிந்து
கொண்டு உங்கள்
பிள்ளைகளுக்கு கூற
வேண்டும்.  அவர்கள் தங்கள்
பிள்ளைகளுக்கும் கூற
வேண்டும்.






அந்த சிலையின் பெயர்

“மானெக்கென் பிஸ்”

மூத்திரம் பெய்த சிறுவன் என்பதே பொருள்

வெகு நாட்களுக்கு முன் நடந்த சம்பவம் இது

